*கின்றன. ஏனையவற்றுள், சிற்சிலவே சிறப்பிக்கப் படும், திருமும்மணிக்கோவைக்கண் ஞான சம்பந் தரின் செயல்வகை சிலவற்றை யழகுறக் கூறுவர்.*

அரிசினக் கடகரி யதுபட வுரித்த
படர்சடைக் கடவுள்தன் திருவரு ளதனால்
பிறந்தது, கழுமல மென்னும் கடிநக ரதுவே;
வளர்ந்தது, தேங்கமழ் வாவிச் சிலம்பரை யன்பெறு
பூங்குழல் மாதிடு போனக முண்டே;
பெற்றது, குழகனைப் பாடிக் கோலக்காப் புக்கு
அழகுடைச் செம்பொற் றாள மவையே;
தீர்த்தது, தாதமல் மருகல் சடையனைப் பாடிப்
பேதுறு பெண்ணின் கணவனை விடமே;
அடைத்தது, அரைசோ டிசையா வணிமறைக் காட்டுக்
குரைசேர் குடுமிக் கொழுமணிக் கதவே;
ஏறிற்று, அத்தியுமாவும் தவிர அறத்துறை
முத்தின் சிவிகை முன்னாள் பெற்றே;
பாடிற்று, அருமறை யோத்தூர் ஆண்பனை யதனைப்
பெருநிற மெய்தும் பெண்பனை யாவே;
கொண்டது, பூவிடு மதுவில் பொறிவண் டுழலும்
ஆவடு துறையில் பொன்னா யிரமே;
கண்டது, உறியொடு பீலி யொருகையிற் கொள்ளும்
பறிதலைச் சமணர் பல்கழு மிசையே;
நீத்தது, அவிழ்ச்சுவை யேயறிந் தரனடி பரவும்
தமிழ்ச்சுவை யறியாத் தம்பங் களையே;
நினைந்தது, அள்ளல் பழனக் கொள்ளம் பூதூர்
இக்கரை ஓடம் அக்கரைச் செலவே; மிக்கவர்

ஊனசம்பந்தம் அறுத்து உயக் கொள்ள வல்ல
ஞானசம்பந்தன் இஞ் ஞாலத் திடையே.

ஞானசம்பந்தரின் செயல்களுட் சிற்சிலவற்றைத் திருவந்தாதியில்,

"அடைத்தது மாமறைக் காடர்தம் கோயிற் கதவினை, யன்று
உடைத்தது பாணன்தன் யாழின் ஒலியை; உரகவிடம்
துடைத்தது; தோணிபுரத்துக் கிறைவன் சுடரொளிவாய்ப்
படைத்தது தண்மையை நள்ளாற்றரசு பணித்திடவே."

என்றும், திருக்கலம்பகத்தில்,

"பண்டமுது செய்தது உமை நங்கையருள்
மேவு சிவ ஞானம்;
பைந்தருள நன்சிவிகை செம்பொன் அணி
நீடுகிற தாளம்,
கொண்டது......"

என்றும் ஓதுகின்றார்.

இவற்றுள் சில செய்திகளையே நம்பியாண்டார் நம்பிகள் பல விடங்களில் பல படியாகப் பாராட்டு கின்றார். இவற்றுள் முன்னணியில் நிற்பது சம்பந்தர் ஞானப்பால் உண்டதாகும். இதனை மட்டில் ஐந்தாறு இடங்களில் பாராட்டிப் பேசுகின்றார். ஆளுடைய பிள்ளையார் திருத்தொகையின்கண் ஞானமுண்ட திறத்தை இனிமையுற விரித்துக் கூறலுற்று,

"பூவார் திருநுதல்மேல் பொற்கட்டி இட்டொளிரக்
கோவாக் குதலை சிலம்பரற்ற – ஓவாது
அழுவான் பசித்தான் என்று ஆங்கு இறைவன் காட்டத்
தொழுவான். துயர் தீர்க்கும் தோகை – வழுவாமே
முப்பத் திரண்டறமும் செய்தாள் முதிராத
செப்பொத்த கொங்கைத் திருநுதலி – அப்பன்
அருளாலே ஊட்டுதலும் அப்பொழுதே ஞானத்
திரளாகி முன்நின்ற செம்மல்."

என்று பாடுகின்றார்.

உலகவாழ்வில் ஈடுபட்டு இன்ப துன்பங்களால் மலம் நீங்குதற்குரிய பக்குவமுற்று இறைவன் திருவருட்பேற்றுக்கு இலக்காவது உயிர்த்தொகைகட்கு இயல்பு. அவ்வாறின்றி, நம் சம்பந்தப்பெருமான் குழவிப் பருவத்திலேயே ஞானம் கைவரப்பெற்றது மிக மிக அரிய செயலாகும். அவ்வருமையால், பெரியரும் அரியருமாய் விளங்கும் அவரது பெருந்தகைமை அறிந்து வழிபடுவதும் அரிதாக இருக்க, எனக்கு அது எளிதாக வந்துவிட்டது என்று மகிழ்ச்சி சிறக்கும் நம்பிகள், திருவந்தாதியில்.

"எளிவந்தவா எழில்பூவரை கொண்மணித் தார் அழுங்கத்
துளிவந்த கண்பிசைந் தேங்கலும் எங்கள்
அரன்துணையாம்
கிளிவந்த சொல்லி பொற்கிண்ணத்தில் ஞானவமிர்தளித்த
அளிவந்த பூங்குஞ்சி இன்சொல் சிறுக்கன்றன் ஆரருளே"

என்றும், திருச்சண்பை விருத்தத்தில்

"கொங்கு தங்குங்குஞ்சி கூடாப்பருவத்துக் குன்றவில்லி
பங்குதங்கும் மங்கை தன்னருள் பெற்றவன் பைம்புணரிப்
பொங்குவங்கப் புனல் சேர்த்த புதுமணற்
புன்னையின்கீழ்ச்
சங்கு தங்கும் வயல் சண்பையர் காவலன் சம்பந்தனே"

என்றும் பாராட்டி யுரைக்கின்றார்.

பட்டினத்தடிகள், ஞானசம்பந்தப் பெருமானது இச்செயலையே வியந்து, தாம் பாடிய திருக்கழுமல மும்மணிக்கோவையில்,

"தாதையொடு வந்த வேதியச் சிறுவன்
தளர்நடைப் பருவத்து வளர்பசி வருத்த
அன்னாயோ என்று அழைப்ப முன்நின்று
ஞானபோகத் தருளட்டிக் குழைத்த
ஆனாத் திரளை யவன்வயின் அருள,
அந்தணன் முனிந்து தந்தார் யார் என
அவனைக் காட்டுவன், அப்ப, வானார்
தோஓடுடைய செவியன் என்றும்
பீஇடுடைய பெம்மான் என்றும்
கையிற் சுட்டிக்காட்ட
ஐய நீ வெளிப்பட்டருளினை யாங்கே"

என்று உரைக்கின்றார்.

இவ்வண்ணமே சம்பந்தர் கோலக்காவில் தாளம்பெற்ற செய்தியைப் பாராட்டியுரைப்பவர். அவர் திருவாயால் பாட்டிசைப்பக் கையால் தாளம் போடுவது கண்ட பரமன், அவர் கைநொந்திடு

மென்று பொற்றாளம் தந்தார் என்று கூறுகின்றார். நம்பியாரூரர், "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தனுக்கும் உலகவர்முன் தாளமீந்து அவன் பாடலுக்கு இரங்கும் தன்மையாளன்" என்று அருளியிருப்பது நாம் அனைவரும் தெரிந்த செய்தி, இவர் கூறுவதைக் காண்மின்:

"கண்ணார் திருநுதலான் கோலக்காவிற் கரநொடியால்
பண்ணார் தரப்பாடு சண்பையர்கோன் பாணி
நொந்திடுமென்று
எண்ணார் எழுத்தஞ்சும் இட்ட பொற்றாளங்கள்
ஈயக்கண்டும்
மண்ணார் சிலர் சண்பைநாதனை யேத்தார் வருந்துவதே,"

என்று பாடுகின்றார். முத்துச் சிவிகை பெற்ற செய்தியும், ஆவடு துறையுள் பொன் ஆயிரம் பெற்றதும் பரவப்படுகின்றன.

திருமருகலில் கணவன் விடந்தீண்டியதால் இறந்துபடக் கண்டு வருந்திய வணிகமகள் பொருட்டு நம் சம்பந்தர் அவ் விடம்தீர்த்து அவள் வருத்தம் போக்கிய செய்தி நம்பியாண்டார் நம்பிகளால் பல விடங்களில் பாராட்டப்படுகிறது.

"வயலார் மருகல் பதிதன்னில் வாளரவால் கடியுண்டு
அயலா விழுந்த அவனுக் கிரங்கி அறிவழிந்த
கயலார் கருங்கண்ணி தன்துயர் தீர்த்த கருணைவெள்ளப்
புயலார் தருகையினான் என்னத் தோன்றும் புண்ணியமே"

என்று திருவந்தாதியும்,

"குவளைக் கருங்கண் கொடியிடை துன்பம் தவிர அன்று
துவளத் தொடுவிடம் தீர்த்த தமிழின் துறை செய்தவன்
திவளக் கொடிக்குன்ற மாளிகைச் சென்னியின்வாய்த்
தவளப் பிறைதங்கு சண்பையர் காவலன் சம்பந்தனே"

என்று திருச்சண்பை விருத்தமும் சிறப்பித்துக் கூறுகின்றன.

திருவுலாமாலையில் இச்செய்தியை வேறொரு வகையால் விதந்து பரவுகின்றார். நம் ஞானசம்பந்தப் பெருந்தகை திருவீதி உலா வருகின்றார். இவர் நலம் கண்டு மகளிர் சிலர் கருத்திழந்து மெலிந்து தம்முட் சொல்லாடுகின்றனர். அமணரை வாதில்வென்று கழுவேற்றிய இவன் தன் மாலையை நமக்குத் தருவான் என்று நாம் கருதுவது பேதைமை என்ற கருத்துப்பட.

—'நங்கைமீர்,
இன்றிவன் நல்குமேல் எண்பெருங் குன்றத்தில்
அன்றமணர் கூட்டத்தை ஆசழித்துப் —பொன்ற
உரைகெழுவு செந்தமிழ்ப்பா வொன்றினால் வென்றி
நிரைகழுமேல் உய்த்தானை நேர்ந்து — விரைமலர்த்தார்
பெற்றிடலாம் என்றிருந்த நம்மிலும் பேதையர்கள்
மற்றுளரோ என்று வகுத்துரைப்பார்"

ஆயினர். அதுகேட்ட வேறுசிலர், அவரை மறுத்து, சம்பந்தப்பெருந்தகை இரக்கம் மிகவுடையர் என்று சாதிப்பாராய், மருகல் விடம் தீர்த்த செய்தியை எடுத்து,

—"மற்றிவனே
பெண்ணிரக்கம் அன்றே, பிறைநுதலீர், மாகாணத்தின்
நண்ணு கடுவிடத்தால் நாட்சென்று — விண்ணுற்ற
ஆருயிரை மீட்டன்று அவனை அணிமருகல்
ஊரறிய வைத்தது எனவுரைப்பார்."

இவ்வாறே, நம் சம்பந்தப்பெருமான் திருமயிலையில் என்பைப் பெண்ணாக்கிய அருட்செயலைத் திருவருணைக் கலம்பகமுடையார் மிக்க நயமுறக் கூறிப் பாராட்டுகின்றார். ஒத்த அன்பால் பிணிக்கப்பட்ட ஒருவனும் ஒருத்தியும் இல்லிருந்து நல்லறம் புரிந்து வருகின்றனர். வருங்கால், அவனுக்குத் தன் கல்வியறிவைப் பெருக்கிக்கொள்வதற்கு வேட்கை மிகுகின்றது. நல்லாசிரியர் ஒருவர் சேய்மையில் இருப்பதை அறிகின்றான். அவர்பாற் செல்லவும் விரும்புகின்றான். கல்வி குறித்துப் பிரியக் கருதும் கருத்தைத் தன் மனைக்கிழத்திக்குத் தெரிவிக்கின்றான். அவள் சீரிய கூரிய அறிவுநலம் படைத்தவள். ஆதலால், அவள் அவனை நோக்கி,

"ஆரும் விரும்பிய கல்விமேல் ஆசையுமக்குளதாயிடின்
பாருள வென்பொருபாவையாய் பாடிய பாவலர் போலவே
நீரு மருந்தமிழ் செப்பிடும் நீர்மையறிந்திவ ணேகுவீர்
மேரு நெடுஞ்சிலையத்தனார் வீறருணாபுரி வெற்பரே"

(செய்.20)

என்று கூறுபவள், தன் பிரிவாற்றாமையும், ஆற்றாது உயிர் நீங்கிய வழி மீட்டும் அதனை வருவித்துப்

பொருந்துவிக்கும் அருட்கவி வேண்டும் என்பதை வற்புறுத்தலும், ஞானசம்பந்தர் என்னைப் பெண்ணாக்கிய நலமும் தோன்ற "என்பொருபாவையாய் பாடிய பாவலர் போலவே நீரும் அருந்தமிழ் செப்பிடும் நீர்மை யறிந்திவண் ஏகுவீர்'' என்று உரைக்கின்றாள்.

இனி, நம் ஞானசம்பந்தப் பெருந்தகை பாடியருளிய திருப்பதிகம் 16000 என்று நம்பியாண்டார் நம்பிகள் குறிக்கின்றார்கள். ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில்,

"நகரம் கெடப்பண்டு திண்தேர் மிசைநின்று நான்மறைகள்
பகரங் கழல வனைப்பதினாறா யிரம்பதிகம்
மகரம் கிளர்கடல் வையம் துயர்கெட வாய்மொழிந்த
நிகரங் கிலிகலிக் காழிப் பிரான்என்பர் நீணிலத்தே"

என்று ஓதுகின்றார். இக்கருத்தே, திருத்தொகையில்,

"—மொய்த்தொளிசேர்
கொச்சைச் சதுரந்தன் கோமானைத் தான்செய்த
பச்சைப் பதிகத் துடன்பதினா றாயிரம்பா
வித்துப் பொருளை விளைக்க வலபெருமான்"

என்றும், திருவுலாமாலையில்,

"பன்னு தமிழ்ப் பதினாயிரம் நற்பனுவல்
மன்னு புவியவர்க்கு வாய்ப்பவும் —முன்னிய
சிந்தனையால் சீரார் கவுணியர்க்கோர் சேய்என்ன
வந்தங் கவதரித்த வள்ளல்"

என்றும் எடுத்தோதி வற்புறுத்துகின்றார்.

இப்பதிகங்களின் வகைகளையும் தம்முடைய பிரபந்தங்களில் நம்பிகள் காட்டியிருக்கின்றார். இசைக்குரிய பண்முறையே வரும் பதிகங்களைப் பதிகமென்றும், திருப்பாசுரத்தைப் பாசுரம் பல்பத்து என்றும், ஏனைச் சிறப்புடைய இயல்பமைந்தவற்றை திருவிராகம், திருவிருக்குக்குறள், யாழ்மூரி, சக்கர மாற்று, ஈரடி முக்கால் என்றும் விரித்துரைக்கின்றார். திருவுலாமாலையில்,

"எப்பொழுதும்
நீக்கரிய இன்பத் திராக மிருக்குக்குறள்
நோக்கரிய பாசுரம்பல் பத்தோடும் – ஆக்கரிய
யாழ்மூரி சக்கரமாற் றீரடி முக்காலும்
பாழிமையால் பாரகத்தோர் தாம்உய்ய – ஊழி
உரைப்பமரும் பல்புகழால் ஓங்க வுமைகோனைத்
திருப்பதிகம் பாடவல்ல சேயை"

என்று உரைப்பது காண்க.

இனி, ஞானசம்பந்தர் தம்முடைய திருப்பதி கத்துள் பாராட்டிய சைவப்பெருமக்கள் இவர் என்றும், அவர்களை இவ்விவ்வகையில் பாராட்டி யிருக்கின்றார் என்றும் நம்பியாண்டார் நம்பிகள் ஆராய்ந்து கூறுகின்றார். இப்பெருமக்களுள் ஞான சம்பந்தரை நினைக்கும்போதே பாண்டிமாதேவியார் தாம் நம் மனக்கண்ணே முந்து நிற்பவர். நம்பிகளும் அம்முறையே திருத்தொகையின்கண்,

"பத்திச் சிவமென்று பாண்டிமா தேவியொடும்
கொற்றக் கதிர்வேல் குலச்சிறையும் கொண்டாடும்
அற்றைப் பொழுதத்து அமணரிடு வெந்தீயைப்
பற்றிச் சுடுகபோய்ப் பாண்டியனை என்னவலான்"

என்றும், முருகநாயனார், திருநீலநக்க நாயனார் என்ற இவர் தம் சிறப்பை,

"வர்த்தமானீசர் கழல் வணங்கி வாழ்முருகன்
பத்தியை ஈசன் பதிகத்தே காட்டினான்;
அத்தன் திருநீல நக்கற்கும் அன்புடையான்"

என்றும் உரைக்கின்றார். திருவந்தாதியில்,

"ஏந்தும் உலகுறுவீர் எழில்நீல நக்கற்கும் இன்பப்
பூந்தண் புகலூர் முருகற்கும் தோழன்னைப் போக மார்ப்பைக்
காந்தும் கனலில் குளிர்படுத்துக் கடற் கூடலின்வாய்
வேந்தின் துயர் தவிர்த்தானை யெப்போதும் விரும்புமினே"

என்று தொகுத் தோதுகின்றார்.

இங்ஙனம், ஞானசம்பந்தரால் பாராட்டப்பட்ட பெருமக்களை நம்பிகள் எடுத்தோதி வந்தாரே; அவரால் திருச்செங்காட்டாங்குடிப் பதிகத்துள் பாசுரந்தோறும் பாராட்டப்பெற்ற சிறுத்தொண்டரைப் பாடிற்றிலரே என்று நினைக்கலாம். அச் சிறுத்தொண்டற்கு நம் ஞானசம்பந்தர் ஒரு திருப் பதிகம் முழுதும் அமைத்த அமைதி நலத்தை நன்கு ஆராய்ந்து ஒரு சிறந்த கருத்தினை நாம் அறிந் தொழுகுமாறு நம்பியாண்டார் நவில்கின்றார்.

திருஞானசம்பந்தப் பெருந்தகையின் திருவருள்பெற வேண்டுவோர் சிறுத்தொண்டர் சிறப்பறிந்து பரவுதல் வேண்டும் என்பார்.

"விரும்பும் புதல்வனை மெய்யரிந் தாக்கிய இன்னமிர்தம்
அரும்பும் புனற்சடை யாயுண்டருள்என் றடிபணிந்த
இரும்பின் சுடர்க்களிற் றான்சிறுத் தொண்டனை
ஏத்துதிரேல்
கரும்பின் மலர்த்தமி ழாகரன் பாதம் தொடர்வெளிதே,"

என்று பரிந்தோதுகின்றார்.

சுட்டுணர்வுக்கெட்டாத முதல்வனை நம் ஞானசம்பந்தப் பெருமான் சுட்டிக்காட்டிய திறத்தை வியந்த பட்டினத்தார், "தோஓடுடைய செவியன் என்றும், பீஇடுடைய பெம்மான் என்றும் கையாற் சுட்டிக்காட்ட" என்றாரன்றோ; அதனையே நம்பி யாண்டார் நம்பிகள் வேறொரு திறத்தால் நமக்கு உரைப்பாராய்,

"வாட்டுவர் தத்தம் துயரை வன்கேழலின் பின்பு சென்று
வேட்டுவர் கோலத்து வேதத் தலைவனை மெல்விரலால்
தோட்டியல் காதன் இவன் என்று தாதைக்குச்
சூழ்விசும்பில்
காட்டிய கன்றின் கழல் திறமானவை கற்றவரே"

என்று உரைக்கின்றார்.

இனி, ஞானசம்பந்தர் பாடியருளிய திருப்பதிகங் களின் பொதுக் கருத்தும் அவற்றால் மக்கட்குண்

டான பயனும் சிற்சில இடங்களில் நம்பியாண்டார் நம்பிகள் நமக்கு அறிவுறுத்துகின்றார்.

பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோல்தோணி கண்டீர் – நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்

என்பதனால், திருப்பதிகங்கள் பிறவிக்கடலை நீந்தற்குத் துணைசெய்யும் என்று உணர்த்துபவர், திருக்கலம்பகத்தில்,

"பெறுபயன் மிகப்புவியுள் அருளுவன
பிற்றைமுறை பெருநெறி யளிப்பனபல்
பிறவியை ஒழிச்சுவன உறுதுயரழிப்பன"

என்று மீட்டும் வற்புறுத்துகின்றார்.

இத்திருப்பதிகங்கள் முற்கூறியவாறு பிறவிப் பிணி கெடுத்தற்குப் பெருந்துணையாம் என்பதை.

"அந்தம் உந்தும் பிறவித்துயர்தீர அரனடிக்கே
பந்த முந்துந் தமிழ் செய்த பராபரன்"

என்று சண்பை விருத்தத்தில் வலியுறுத்தி, இவை பத்திநெறியை மக்கட்கு உணர்த்தி, அதுவே சிவனருளைப் பெறுதற்கு நேரிய பெருவழியாம் என்று பல பாசுரங்களால் நமக்கு அறிவுறுத்து கின்றார்.

ஆளுடையார் திருத்தொகையில், இப்பதிகங் களைப்பற்றிக் கூறலுற்ற நம்பியாண்டார் நம்பிகள், "கத்தித் திரிபிறவிச் சாகரத்துள் ஆழாமே, பத்தித்

தனித்தெப்பம் பார்வாழத் தந்தபிரான்'' என்று உரைத்துப்பின்னர்,

பதிகப்பெருவழி காட்டப் பருப்பதக் கோன்பயந்த
மதியத் திருநுதல் பங்கன் அருள்பெற வைத்த எங்கள்
நிதியைப் பிரமாபுரநகர் மன்னனை என்னுடைய
கதியைக் கருதவல்லோர் அமராவதி காப்பவரே"

என்றும்,

"தேறும் புனல்தில்லைச் சிற்றம்பலத்துச் சிறந்துவந்துள்
ஊறும் அமிர்தப் பருகிட்டெழுவதோர் உட்களிப்புக்
கூறும் வழிமொழி தந்தெனை வாழ்வித்தவன்
கொழுந்தேன்
நாறும் அலங்கல் தமிழாகரன் என்னும் நன்னிதியே,"

என்றும் திருச்சண்பை விருத்தத்தில்,

"ஆறதேறுஞ் சடையானருள் மேவ அவனியர்க்கு
வீறதேறும் தமிழால் வழி கண்டவன்"

என்றும் கூறியுள்ளார்.

இனி, ஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகத்தை ஓதும்போது திருநனிபள்ளித் திருப்பதிகத் திருக் கடைக்காப்பில் "இடுபறை என்ற அத்தன் பியல் மேலிருந்து இன் இசையால் உரைத்த பனுவல், நடுவிருள் ஆடுமெந்தை நனிபள்ளியுள்க வினை கெடுதல் ஆணைநமதே" என்றும், கோளறுபதிகத் திருக்கடைக்காப்பில், "தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து நலியாத வண்ணம் உரைசெய், ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்

அரசாள்வர் ஆணைநமதே" என்றும் அருளுவதைக் காணுந்தோறும் நமக்கு வியப்பும் இறும்பூதும் உண்டாகின்றனவன்றோ?

நனி பள்ளிக்குப் போம்போது ஞானசம்பந்தர், "நாம் அத்தன் பியன்மேல் இருந்து இன்னிசையால் உரைத்த பாசுரம் பத்தும் ஓதுபவர் வினைகெடுவர்; அதற்கு நமது ஆணை" யென்பது காணும்போது, "இச்சிறுபிள்ளை தன் தந்தை தோளில் இருந்து கொண்டு சொல்லும் இறுமாப்பு என்னே" என்றெழும் நினைவை நம் சேக்கிழார்பெருமான் உடனே நம்மைத் தெருட்டிப் பணிவிக்கின்றார். தந்தை தோள்மேல் இருந்தார் என்றது பரமன் திருவடிக் கீழ் இருந்தார் என்பதை யுணர்த்தும்; திருவடிக் கீழ் எனவே, அவர் திருமுடிமேல் பரமன் திருவடியிருப்பது பெறப்படும். படவே, அவர் மனத்தே தம்முடியில் *திருவடியிருப்பது கருதி நிற்கின்றாராம்; சேக்கிழார், "மாதவம் செய்தாதை யார் வந்தெடுத்துத் தோளின்மேல் வைத்துக்கொள்ள, நாதர்கழல தம்முடிமேல் கொண்ட கருத்துடன் போந்தார் ஞான முண்டார்" (ஞானசம்.பு. 113) என்றும், திருநனிபள்ளி திருப்பதிகத் திருக்கடைக் காப்பில் "ஆணை நமதே" என்றதை வியந்து, "நாரியோர் பாகர் வைகும் நனிபள்ளியுள்குவார்தம், பேரிடர் கெடுதற்காணை நமதெனும் பெருமை வைத்தார்" (திருஞான. பு. 115) என்றும் உரைக்கின்றார்.

இவ்வாறு "ஆணைநமதே" என்னும் பெருமை மொழியை நன்கு கண்டு இறும்பூதெய்திய நம்பி

யாண்டார், திருத்தொகையில், "முத்திப் பகவன் முதல்வன் திருவடியை, "அத்திக்கும் பத்தர் எதிர் ஆணை நமதென்னவலான்" என்று பாராட்டியுரைக் கின்றார்.

இங்ஙனம் அடியாரைப் பற்றும் வினைகளைக் கெடுத்தற்கும் கோள்முதலியவற்றால் எய்தும் தீமை கெடுதற்கும் ஆணையிட்டுக் கூறும் பெருமை படைத்த ஞானசம்பந்தப் பெருந்தகையாரை வழி படுவதும் சிவ வழிபாடே என்றும், அதனாற் பெறும் பயனும் சிவ போகமே என்றும் நம்பியாண்டார் நம்பி கூறுகின்றார். அப்பகுதியைத் தொடங்குவதற்கு முன் அகத்திணை நெறியில் அவரை நம்பிகள் பாடி யிருக்கும் திறம் சிறிது கூறுகின்றோம்.

ஞானசம்பந்தரைப் பாராட்டி நம்பியாண்டார் நம்பிகள் பாடிய புகழ் நூல்களில் பெரும்பான்மை யான பாட்டுகள் அகத்திணை எழிலும் விரவி யிருக்கின்றன. அவற்றை, திணையும் துறையுமாக வகுத்து ஆராய்தற்குக் காலம் இன்மையின் இரண் டொன்றே காட்ட முயல்கின்றோம்.

ஒருத்தி ஒரு தலைமகனைக் கண்டு அவன் நட்புப் பெற்றுக் களவொழுக்கம் பூண்டு ஒழுகு கின்றாள். அவள் அவனை இடையறாது கூடியிருப்ப தற்கு இயலாமையால் மேனி வேறுபடுகின்றாள். அவ்வேறுபாடு புறத்தார்க்குப் புலனாகிறது. அதனை அவள் தோழிக்குக் குறிப்பிக்க, அவள் செவிலிக்குத் தலைவிக்கும் தலைவனுக்கும் உண்டான தொடர்

பினை உரைக்கின்றாள். இது கள வொழுக்கத்தில் அறத்தொடு நிலையென்று வழங்கும். தலைவி புனத்தே இருக்குங்கால் யானையொன்று போந்து அச்சுறுத்துகிறது. அதுகண்டு தலைவி அலமரு கின்றாள்; அப்போது தலைமகன் போந்து அவ் யானையை வெருட்டியோட்டி அவளைக் காக்கின் றான். அந்நன்றி மறவாமல் அவள் அவன்பால் அன்புற்று மெலிகின்றாள் என்ற இக் கருத்தை, அத் தோழி உரைக்கத் தொடங்கி,

"மன்னங்கணை செந்தமிழாகரன் வெற்பில் வந்தொருவர்
அன்னங்கள் அஞ்சன்மின்என்று, அவ்வேழத்
திடைவிலங்கிப்
பொன்அங்கு அலைசாவகை எடுத்தாற்கு இவள்பூண்
அழுந்தி
இன்னந் தழும்புளவாம் பெரும்பாலும் அவ்வேந்தலுக்கே"

என்று உரைக்கின்றாள். இவ்வாறு அகனைந்திணை யொழுக்கமே பற்றி வருவன பல.

மகளைப் பேதுறுவித்தான் என நற்றாய் ஏசல் என்ற துறையில் நம்பியாண்டார் நம்பிகள் ஞான சம்பந்தப் பெருந்தகையைப் பிள்ளையென்ற நிலை யில் வைத்து அழகிய பாட்டொன்றைப் பாடு கின்றார்.

தனமலி கமலத் திருவெனும் செல்வி
விருப்பொடுந் திளைக்கும் வீயா இன்பத்து
ஆடக மாடம் நீடு தென்புகலிக்

காமரு கவினார் கவுணியர் தலைவ
பொற்பமர் தோள, நற்றமிழ் விரக,
மலைமகள் புதல்வ, கலைபயில் நாவ,
நினாது, பொங்கொளி மார்பில் தங்கியதிருநீறு
ஆதரித் திறைஞ்சிய பேதையர் கையில்
வெள்வளை வாங்கிச் செம்பொன் கொடுத்தலின்
பிள்ளையாவது தெரிந்தது பிறர்க்கே" (கோவை. 10)

*இதன்கண், "வெள்வளைவாங்கி" என்ற உடம்புநனி சுருங்கல்; "செம்பொன் கொடுத்தல்" என்றது பசலை பாய்தல். பிள்ளைகளன்றிப் பெரியோர் வெள் வளைக்கு மாறாகச் செம்பொன் தாரார் என்பதும், பேதையார்க்குச் செம்பொன்னைத் தெரிந்தவர் கொடார்; சிறு பிள்ளைகள் அப்பொன்னின் அருமை தெரியாராதலின், அவர் தான் கொடுப்பர், நீ இவற்றைச் செய்தனையாதலின், "பிள்ளையாவது தெரிந்தது பிறர்க்கென்னார்". பிறர்க்கு என்றவிடத்து எச்சவும்மை தொக்கதாகக் கொள்ளின், எனக்கே யன்றிப் பிறர்க்கும் இது நன்கு தெரிந்துவிட்டது என்றாளாம். "பிள்ளையாவது தெரிந்தது பிறர்க்கே" என்றதன்கண், "பிறரெல்லாம் இவ்வாறு காரணம் காட்டிப் பிள்ளையென நின்னை யேசுகின்றனர்; யான் நீ பெரியன் என்றே பேணிப் பரவுகின்றேன்; நீ நின் மார்பின் மாலையைத்தந்து என் மகள்கொண்ட பேதுறவையைத் தீர்த்தருளவேண்டும்" எனத் தாய் தார் வேண்டிநிற்கும் நிலையும் தோற்றுவிக்கும் நயம் காண்மின்.*

ஞானசம்பந்தர்பால் உண்டான காதல் வேட்கையால் கண்ணுறக்கமின்றிக் கைவளை சோர்ந்து மேனி வேறுபட்டு இருக்கும் ஒருத்தியைத் தோழி, நெருங்கி எத்துணை வேறுபாடு எய்தினும் இவ்வாறு கைவளை சோர நிற்றல் நன்றன்று என்று கூற, அவட்கு விடையிறுக்கும் அத்தலைவி.

"ஊரும் பசும்புரவித் தேரொளித்த தொளிவிசும்பில்
கூரும் இருளொடு கோழிகண்துஞ்சா கொடுவினையேற்(
ஆரும் உணர்த்திலர், ஞானசம்பந்தன் அம் தாமரையின்
தாரும்தருகிலன் எங்ஙனம்யான் சங்கு தாங்குவதே"

(கோவை24)

என்று கூறுகின்றாள். இதன்கண் இரவு முழுதும் அவள் கண்ணுறக்கமின்றி யிருந்த குறிப்பை, தேர் ஒளித்தது, இருள் கூர்ந்தது, கோழி கூவிற்று என அந்திமாலையும், நடுவியாமமும் விடியற்காலமும் அக்கால நிகழ்ச்சி வாயிலாக உணர்த்துமாற்றால் தோற்றுவிக்கின்றாள். என்னோடு இருக்கும் தோழியாகிய நீ நன்கு உறங்கினை; என் கலக்கத்தை அறிந்திலை. யென்பாள், "ஆரும் உணர்ந்திலர்" எனமுன்னிலைப் புறமொழியாகப் புகல்கின்றாள். இனி, இதனால் வேறு ஒரு கருத்தும் குறிக்கின்றாள். என் கைவளை சோர்வது கண்டுநெருங்கியுரைக்கும் நீ, அச்சோர்வுக்கு ஏது வினையுணர்ந்து ஞான சம்பந்தன் பால் சென்று, தார்பெற்றுவர முயல் கின்றிலை யென்றற்கு, "ஆரும் உணர்ந்திலர்" என் கின்றாள். மேலும், இதனால், தாயர் முதலாயினோர்

இவட்குற்ற வேறுபாட்டினை நன்கு ஓராது வெறியயர்தலும் கட்டுக் காண்பதும் பிறவும் வீணே செய்கின்றனர் என்பதும் பெறப்படும், உங்கள் உணர் வின்மையைக் கண்டு, அந்த ஞானசம்பந்தனாகிலும், வந்து கூடுதல் நினையானாயினும், தன் மாலை யாயினும் தருகின்றானோ எனின் அது தானும் இல்லை; அதனால் யான் சோர்ந்து மெலியாது ஆற்றியிருப்பது எவ்வாறு முடியும் என்பாள். "எங்ஙனம் யான் சங்கு தாங்குவதே" என்கின்றாள்.

தோழியின் துணைபெற்றுத் தலைவியொடு கூடியொழுகும் தலைமகனைச் சேட்படுக்கலுற்ற தோழி, அவனை, "பகற்போது மறைந்தது; இங்கு நில்லற்க" என்று கூறுபவள், ஞானசம்பந்தப் பிள்ளையார் சிவபரம்பொருளின் திருமுன்நின்று அருள்பெறும் திறத்தை அழகு திகழக் கூறுகின்றாள்:

"சிறுபால் கலித்த விளிகுரல் கிண்கிணி
சேவடி புல்லிச் சிறுகுரல் பயிற்றி
அமுதுண் செவ்வாய் அருவி தூங்கத்
தாளம் பிரியாத் தடக்கை யசைத்துச்
சிறுகூத் தியற்றிச் சிவனருள் பெற்ற
நற்றமிழ் விரகன் பற்ற லர்போல
இடுங்கிய மனத்தொடும் ஒடுங்கிய சென்று
பரிதியும் குடகடற் பாய்ந் தனன்
கருதி நிற்பது பிழைகங்குல் இப்புனத்தே" (கோவை. 19)

இதன்கண் ஞானசம்பந்தப் பிள்ளையார் பாதத்திற் கட்டிய கிண்கிணி சிறு குரல் மிழற்ற. திருவாயில்

அமுதூறு நின்று திருப்பதிகம் பாட, திருக்கை அதற் கேற்பத் தாளம்போட, தம்மை மறந்து சிவனருளில் தோய்ந்து நிற்றலின் திருவடி அடி பெயர்த்துச் சிறு கூத்தாடத் தோன்றும் இன்பக் காட்சி நம் கண் முன் தோன்றுவது காண்மின்.

இவருடைய பாட்டுக்களில் அகப்பொருட்டுறை யில் இதுகாறும் எப்புலவராலும் காட்டப்படாத புதுப்புதுத் துறைகளும் கருத்துக்களும் பல்கியிருக் கின்றன. அவற்றை யெல்லாம் ஈண்டெடுத்துக் காட்டுவது வேண்டா கூறலாம். இவர் பாட்டுக்களை மட்டில் தனியே எடுத்து ஆராய்ந்து காண விரும்பு வோர்க்கு அவை பொருளாம்.

இனி, நம்பியாண்டார் நம்பிகள் ஞானசம்பந்தப் பெருமானைத் தனித்த முறையில் எடுத்தோதி நமக்கு அறிவுறுத்துவனவற்றைச் சிறிது கூறி என் சிற்றுரையை முடித்துக் கொள்ளுகின்றேன்.

முதற்கண், ஞானசம்பந்தப் பெருந்தகையின் திருநாமத்தை ஓதுவதே வேண்டுவ தென்கின்றார். ஒருவன் பெற விரும்பும் பேறுகள் அனைத்தையும் பெறுதற்கு அதுவே வழியென்பார்,

'உறவும் பொருளும் ஒண்போகமும் கல்வியும் கல்வியுற்ற
துறவும் துறவிப் பயனும் எனக்குச் சுழிந்தபுனல்
புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்பும்
ததும்பும்வண்டின்-
நறவும் பொழில்எழில் காழியர்கோன் திருநாமங்களே"

*என்று கூறுகின்றார். பிறிதோரிடத்தில் இக் கருத்தைச் சிறிது மாற்றி,*

"எனவே இடரகலும் இன்பமே எய்தும்
நனவே அரனருளை நாடும் – புனல்மேய
செங்கமலத் தண்தார்த் திருஞான சம்பந்தன்
கொங்கமலத் தண்காழிக் கோ"

*என்று நமக்கு அறிவுறுத்துகின்றார். ஆகவே ஞான சம்பந்தர் என்ற திருப்பெயர் ஓதினார்க்கு உயர்நலம் பெறுவிக்கும் உறுதியுடைய தென்பது வற்புறுத்தினா ராயிற்று.*

*இனி, ஞானசம்பந்தப் பெருந்தகையின் திருவடியை அனைவரும் பரவிப் பணியவேண்டும் என்பார் அவற்றின் பெருமையைப் பல விடங்களில் பாராட்டிக் கூறுகின்றார். நினைவார் நினைவில் எழுந்தருளி இன்பத்தேன் பெருகுவது அவர் திருவடியின் மாண்பு என்பார்,*

"என்றும் அடியவர் உள்ளத் திருப்பன, இவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன, நல்லசங்கத்து
ஒன்றும் புலவர்கள் யாப்புக் குரியன, ஒண்கலியைப்
பொன்றுங் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே"

*என்று திருமும்மணிக் கோவையிலும்,*

"கவிக்குத் தகுவன, கண்ணுக் கினியன, கேட்கில்இன்பம்
செவிக்குத் தகுவன, சிந்தைக் குரியன, பைந்தரள
நவிக்கண் சிறுமியர் முற்றில் முகந்துதம் சிற்றில்தொறும்
குவிக்கத் திரைபரக்கும் கொச்சை நாதன் குரைகழலே"

என்று திருவந்தாதியிலும் பாராட்டி யிருக்கின்றனர். இவ்விரண்டு பாட்டுக்களிலும் ஞானசம்பந்தர் திருவடி சிந்தித்தற் குரியனவாம் என்று வற்புறுத்து கின்றாரன்றோ? சிந்திப்பதால் உண்டாகும் பயனே ஞானப்பேறு என்று சேக்கிழார் பெருமான் தெரிவிக் கின்றார். 'வாழ்க அந்தணர்' என்று தொடங்கும் திருப்பாசுரத்துக்கு அவர் பேருரை விரித்து அதன் முடிவில், அப்பேருரையினைத் தாம் எழுதுதற்குத் துணைசெய்தது எந்தை ஞானசம்பந்தப் பெருந் தகையின் திருவடி ஞானமே என்பார், 'வெறியார் பொழிற் சண்பையர் வேந்தர் மெய்ப்பாசுரத்தைக், குறியேறிய எல்லை அறிந்து கும்பிட்டேனல்லேன்; சிறியேன் அறிவுக்கு அவர் தாம் திருப்பாதம்தந்த, நெறியே சிறிதுயான் அறிநீர்மை கும்பிட்டேனன் பால்" என்று ஓதுகின்றார். ஞானசம்பந்தப் பெருந் தகையின் திருவடிப்பேறு ஞானப்பேறே என யாப்புறுத்தற்கு இதன்கண், அவர்தம் திருப்பாதம் தந்த நெறியென்று சேக்கிழார் பெருமான் கூறு கின்றார். சிவப்பிரகாச சுவாமிகளும் இத்திருவடிப் பேறு வீடு பேறே என்பார். "பூவான்மலிமணி நீர்ப்பொய்கைக் கரையினியல், பாவான்மலி ஞானப் பாலுண்டு, நாவான், மறித்தெஞ் செவியமுதா வார்த்த பிரான் தண்டை, வெறித் தண் கமலமே வீடு" என்று ஓதியிருத்தலை நாம் நன்கு அறிகின்றோம்.

ஞானசம்பந்தர் திருவடி பணிவார் பெறும் பயன் ஞானமும்வீடும் என மேலே காட்டிய பெரு

மக்கள் வழங்கிய நல்லுரையால் தெளிந்தோமாயினும், நம்பியாண்டார் கூறுவது காண்போம். அவரும் திருவடிப்பேறு சிவபோகப் பேறே என்பார்.

"பெறுவது நிச்சயம், அஞ்சல்நெஞ்சே, பிரமாபுரத்து
மறுவறு பொற்கழல் ஞானசம் பந்தனை வாழ்த்துவதால்
வெறியுறு கொன்றை மறியுறு செங்கை விடையெடுத்த
பொறியுறு பொற்கொடி எம்பெருமான் அமர் பொன்னுலகே

என்று அழுத்தமும் திருத்தமும் பொருந்தக் கூறுகின்றார். சிவபோகம் பெறுதல் எளிதன்றே; திருஞானசம்பந்தர் திருவடி வழிபாடு அதனைத் தருமென மிக எளிதாகக் கூறுகின்றீரேயெனின், "எளிது எளிதே" எனவற்புறுத்துவாராய், பிறிதோரிடத்தில்,

"முத்தன வெண்ணகையார் மயல்மாற்றி முறைவழுவாது
எத்தனைகாலம் நின்றேத்தும் அவரினும் என்பணிந்த
பித்தனை எங்கள்பிரானை அணைவது எளிதுகண்டீர்,
அத்தனை ஞானசம்பந்தனைப் பாதம் அடைந்தவர்க்கே"

என்று உரைக்கின்றார். இதனைக் கேட்டதும், நம்மனோர் மனத்தில், "அஃது எவ்வாறு இயலும்; ஞானசம்பந்தர்க்கு அடியோம் என்பதனால் சிவபோகம் பேறு எய்தும் என்பது எங்ஙனம் அமையும்?" என்றெல்லாம் எண்ணம் எழுகிறது. அதற்கு நம்பியாண்டார் நம்பி நல்ல காரணம் கூறுவார்.

"சுரபுரத்தார்தம் துயருக் கிரங்கிச் சுரர்கள்தங்கள்
பரபுரத்தார் தம்துயர்கண்டருளும் பரமன்மன்னும்

அரபுரத்தானடி எய்துவன்என்பது அவனடிசேர்
சிரபுரத்தான் அடியார் அடியான்எனும் திண்ணனவே"

என்று கூறுகின்றார். இவ்வாறு எடுத்து மொழிந்தவர். இதற்குத் தக்க எடுத்துக் காட்டும் ஓதுகின்றார். எடுத்துக் காட்டும் அளவை வகைகளுள் ஒன்று.

அது,

"காரங் கணைபொழில் காழிக் கவுணியர் தீபன்நல்லூர்ச்
சீரங் கணைநல் பெருமணந் தன்னில் சிவபுரத்து
வாரங் கணைகொங்கை மா தொடும்புக்குறும்
போதுவந்தார்
ஆரங் கொழிந்தனர் பெற்றதல் லாலவ் வரும்பதமே"

என்பது.

இதனைக் கேட்குமவர் நெஞ்சில் தாமும் ஞானசம்பந்தர் திருவடி பரவி அப்பேரின்ப வாழ்வு பெறுதற்கு முயலவேண்டும் என்ற வேட்கை கொள்வர், நினைத்தலும் செய்வர். அந்நினைவு நெடிது செல்லாது இடையற்றுப் போதலும் உண்டு. அப்போது, தம்மை, நினையவொட்டாது தடுப்பது வினையென்னும் உணர்வுதோன்றி அவர் உள்ளத்தை அலைக்கும். அதனால் அவர் மனம் கலங்குவர். அக்கலக்கமறிந்தே, நம்பியாண்டார் நம்பிகள், "உங்கள் முயற்சியை முன்னை வினைப்பயன் போந்து இடையூறு செய்து கெடுப்பதாக எண்ணுகின்றீர்கள்; ஞான சம்பந்தன் திருவடி வழிபாடு அவ்வினைப்

பகையைச் சிதைக்கும்; நீவிர் கவலுதல் வேண்டா" என்பாராய்,

"நலமலி தரும்புவனி நிறைசெய்புகழ் இன்பம்நனி
பனிமதியணிந்த பொழில்சூழ்
பொலமதில் இரும்புகலி அதிபதி விதம்பெருகு
புனிதகுணன் எந்தம்இறைவன்
பலமலி தருந்தமிழின் வடகலை விடங்கன்மிகு
பரசமய வென்றியரிதன்
சலமலி தருங்கமல சரண்நினைவன் என்றனது
தகுவினைகள் பொன்றும் வகையே"

என்று ஓதி வினைப்பகையைக் கெடுத்தற்கு விரகு கூறித் தெருட்டுகின்றார்.

இவ்வாறு, திருஞான சம்பந்தப் பெருந்தகையின் திருவடிநினைந்து வழிபடும் நெறியில் நம்மை அறிவுறுத்திக் கூட்டுவிக்கும் இச்சான்றோர் இவ்வகையால் அடியராயினர் பெருமை இது எனப் பல பாசுரங்களின் வாயிலாகத் தெரிவிக்கின்றார். ஒன்று காட்டுதும்.

"மேனாட் டமரர்தொழ விருப்பாரும் வினைப்பயன்கள்
தாநாட்ட டருநரகில் தளர்வாரும் தமிழர்தங்கள்
கோனாட்டருகர் குழாம்வென்ற கொச்சையர் கோன்கமலப்
பூநாட்டடி பணிந்தாரும் அல்லாத புலையருமே"

எனபது காண்க. இதன்கண் அடிபணியும் பெரியோர் பேரின்ப வாழ்வில் இனிதிருப்பரென்பதும், பணியா

தார் நரகில் தளர்வரென்பதும் கூறி, பணியாதவரைப் புலையரென்று இழித்துரைப்பதும் காண்க.

இந்நிலையில் திருமாலும் அயனும் சிவபரம் பொருளின் திருவடியும் திருமுடியும் முறையே காண முயன்று அலமந்த செய்தியை நினைந்து, அவர் தாமும், நம் ஞானசம்பந்தர் திருவருளை நாடி யிருப்பின், அவர்கட்கு அவர் அவற்றைக் காட்டி யிருப்பாரென்பார்,

"நிலமேறிய மருப்பின் திருமாலும் நிலம்படைத்த
குலமேறிய மலர்க் கோகனகத் தயனும்கொழிக்கும்
சலமேறிய முடிதான் கண்டிலர் தந்தைகாண அன்று
நலமேறிய புகழ்ச்சம்பந்தன் காட்டிய நாதனையே"

என்று கூறுகின்றார்.

இவ்வாறு மாலும் அயனும் காண்பதற்கரிய பரமனைத் தாம் எளிதிற்கண்டு, அதனோடமையாது தந்தைக்கும் காட்டியருளிய அருளாளரான ஞான சம்பந்தப் பெருந்தகையைத் தாம் எளிதில் பற்றிப் பரவுதற்கு நேர்ந்த நேர் பாட்டினைத் தாமே வியந்து,

"செப்பிய என்ன தவமுயன்றேன் நல்ல செந்தமிழால்
ஒப்புடை மாலைத் தமிழாகரனை உணர்வுடையோர்
கற்புடை வாய்மொழி யேத்தும்படி கதறிட்டிவர
மற்படு தொல்லைக் கடல்புடை சூழ்தரு மண்ணிடையே"

என்று பாடி மகிழ்கின்றார். இம்மகிழ்ச்சி மிகுதியால், இனி ஞான சம்பந்தரை, யன்றிப் பிறரைப் பாடுதற்கு என் மனம் செல்லாது; ஆனைமேல் அம்பாரி கட்டிச்

செல்லும் அரிய செல்வம் சிறந்த வாழ்வு தானே வந்தமைவதாயினும் அதனை வேண்டேன் என்று கூறுவாராய்,

உகட்டித்து மோட்டு வராலினம் மேதி முலையுரிஞ்ச
அகட்டிற் சொரிபால் தடநிறை கொச்சை வயத்தரசை
தகட்டில் திகழ்மணிப் பூண்டமி ழாகரன் றன்னையல்லால்
பகட்டிற் பொலியினும் வேண்டேன் ஒருவரைப் பாடுதலே"

என்று கூறுகிறார்.

இவ்வண்ணம் ஞானசம்பந்தர்பால் திண்ணிய அன்பராகுமிவர், இப்பாட்டின்கண் ஒருவரை யென்றது, சிவனடியாரல்லாத பிறர் ஒருவரையாகும் எனக்கொள்ளல் வேண்டும்; என்னை, திருநாவுக் கரசரைத் திருவேகாதசமாலை பாடிப் பரவியிருக் கின்றாராகலின். அல்லதூஉம் அவர் திருஞான சம்பந்தரொடு கூடியிருந்து படிக்காசு பெற்ற செய்தியை விதந்து, இவ்விரு பெருமக்களும் கூடி யிருந்த கூட்டத்தின் பயனே இன்றும் சைவவுலகு நிலை பெற்றிருத்தற்கு ஏதுவாயிற்றென்பார்,

பாடிய செந்தமிழாற் பழங்காசு பரிசில் பெற்ற
நீடிய சீர்த்திரு ஞானசம்பந்த னிறை புகழான்
ஏடியல்பூந் திருநாவுக் கரசோ டெழில் மிழலைக்
கூடிய கூட்டத்தினா லுளதாய்த்திக் குவலயமே"

என்று ஓதுகின்றார்.

# 10

# வினையுணர்வும் ஞானசம்பந்தரும்

**வி**னைத்தொடர்புள்ள சொற்கள் இந்நாளில் எல்லாருடைய பேச்சிலும் எல்லாக் காலத்தும் காணப்படுகின்றன. கற்றவர் கல்லாதவர், செல்வர் வறியர், இளையர் முதியர், ஆடவர் மகளிர் ஆகிய யாவரும் இன்பம் துன்பம் என்ற இருவகைக் காலத்திலும் இவ்வினையைப் பற்றிய பேச்சுக்களை வழங்குகின்றனர். இன்பம் துன்பம் என்ற இரண்டின் நுகர்ச்சிக்குக் காரணம் நுகர்வோரது வினையே என்ற உணர்வு நன்கு வேரூன்றியிருக்கிறது. துன்பமும் ஒருவனைக்கண்டு ஆறுதல் கூறும் வேறொருவனும் "இது முன்னை வினையின்பயன்" என்று மொழிவது இயல்பாக இருக்கிறது.

தமிழ் நூல்களிலும் இவ்விணையுணர்வு நன்கு விளங்கித் தோன்றுகிறது. மிகப் பழையதாகிய தொல்காப்பியம் முதல் இன்று தோன்றும் திரைப் பாட்டுவரையில் எல்லாப்பாட்டுக்களிலும் உரை

---

* இது கரந்தைத் தமிழ்ச்சங்க இருபத்தெட்டாம் ஆண்டு விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவாகும்.

*களிலும் வினைபற்றிய சொல்லும் சொற்றொடரும் பயின்று வருகின்றன. இந்நூல்களுள், வினைத்தொடர் பான மொழிகள், எல்லாவற்றிலும்விடத் தேவா ரத்தில் மாத்திரம் மிகுதியாகவும், தேவாரப் பெருமக்களுள் ஞானசம்பந்தர் திருப்பாட்டுக்களில் மிகப்பெரிதும் இடம்பெற்றுள்ளன. ஞானசம்பந்தர் திருப்பாட்டுக்கள் சுமார் 4200 உள்ளன; அவற்றுள், சுமார் 3600 திருப்பாட்டுக்களில் இவ்வினையுணர்வு பயின்று வருகின்றது.*

*இங்ஙனம், இவரது திருப்பாட்டுமட்டில் வினைத்தொடர்பான சொற்கள் பெறுவானேன்? இவர் போலும்பெரு மக்களின்அருட்பாடல்களில் அத்துணைப்பயில வழங்காமையின், இது பற்றிய பேச்சு, இவர்காலத்து ஓங்கிநின்றதாகல் வேண்டும். தேவாரத்துக்கு முன்னிருந்த நூல்களிலும், இத் துணைப் பெருவழக்குக் காணப்பட்டிலது. முன்னைய நூல்கள், இலக்கணம், இலக்கியம், சமயநூல் எனப் பகுக்கப்படும். இவற்றுள் இலக்கியங் களும் சமயநூல்களும் பிரிப்பின்றி ஒரு தன்மை யாகவே அமைந்திருக்கின்றன. நீதிநூல்களோ இடை இடையே சமயக் கருத்தும் கொண்டு நிலவுகின்றன.*

*இந்தியநாட்டு நூல்வரலாறு காண்பவர் வேதங் களே மிகப் பழைமை வாய்ந்தவை யென்கின்றனர். அவற்றில் மிகச் சிறிதாகவே வினையுணர்வு காணப் படுகிறது என்றும், வேத காலத்துக்குப் பின்னர் தான், இவ்வுணர்வு நாட்டில் பயில வழங்கிவருகிறது*

என்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். இவருட் சிலர், இவ்வுணர்வு வேதகாலத்துக்கு முற்பட்ட தென்றும் புத்த சமண சமயங்கள் நாட்டில் பரவத் தொடங்கிய பின்பே, இவ்வுணர்வு மிகுதியும் பயில்வ தாயிற்றென்றும் மொழிகின்றனர். நம்தண்டமிழ் நாட்டிலும், தொல்காப்பியம் முதல் தேவாரம் தோன்றிய காலம்வரையில், வினையுணர்வு மிக்க பயிற்சியின்றி யிருந்தது. ஞானசம்பந்தர் காலத்திற் றான் அஃதாவது இன்றைக்குச் சற்றேறக்குறைய 130 ஆண்டுகட்டுமுன்பு தான், வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் வினையுணர்வையே அடிப்படை யாகக் கொண்டு எழுந்தவையாதலின், அவற்றின் தொடர்புடைய நூல்களை விடுத்து, ஏனையவற்றை நோக்கின், அவை தொல்காப்பியமும் சங்க விலக்கியங்களும் எனக் காணப்படும்.

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று பாகுபாட்டதாகும். இதன்கண், எழுத்ததிகாரம், எழுத்தும். அது சொல்லின் கண் இடம்பெற்றுத் தொடர்புவுறுதலும் கூறுவது; அதனால், அதன்பால் வினையியல்பு கூறும் பான்மை இன்றாம். சொல்லதிகாரம் வினை யியல்பைக் கூறுகிறது. இது, பொருளின் புடை பெயர்ச்சியாகவும் வினையென்றுசுட்டி, "வினை யெனப்படுவது வேற்றுமை கொள்ளாது, நினையுங் காலைக் காலமொடு தோன்றும்", "காலந்தாமே முன்றெனமொழிப" என்பனவாய நூற்பாக்களால்

விளக்கிக் கூறுகின்றது. பொருளதிகாரம், ஆண்மகன் ஒருவன், தன் ஆண்மை துணையாகக் கொண்டு செய்யும் பொருண்முயற்சியினை வினையென்று காட்டி, அச்செய்கை நிகழ்ச்சிகளையும் "வினை" யென்றே வழங்குகின்றது. "வினைவயிற்பிரிந்தோன் மீண்டுவருகாலை, இடைச்சுரமருங்கிற்றவிர்தல் இல்லை, உள்ளம்போலவுற்றுழியுதவும், புள்ளியற் கலிமா வுடைமையான" எனவருதல் காண்க. பிற்காலச் சமய நூல்கள் வழங்கும் பொருளிலும் ஆசிரியர் தொல்காப்பியனார், இவ் வினையென்னும் சொல்லை,"வினையின் நீங்கி விளங்கிய அறிவின், முனைவன் கண்டது முதனூலாகும்" என்று நூற்பாவில் வழங்கியுள்ளார்.

சங்கவிலக்கியங்களுள், பதினெண் கீழ்க்கணக்கு களுள் தொகுக்கப்பட்ட சில வொழிய, ஏனையவும், தொகை நூல்களும் அகம், புறம் என இருவகை யாகும். அவற்றுட் புறப்பொருள் வழியாகிய புறநானூறு முதலியன வினையுணர்வைக் கூறு கின்றன. வினை, நல்வினையும் தீவினையும் என இருவகைத்தாய் முறையே இன்பமும் துன்பமும் பயக்குமென்பதனை வினையறிவு மிக்க புலவர் கூறுவர். ஆகவே, இன்பம் துன்பமும் பயக்குமென்ப தனை வினையறிவு மிக்க புலவர் கூறுவர் ஆகவே, இன்பம் பயக்கும் நல்வினையே மக்கள் விரும்பும் மாண்புடையதாகலின், அறிஞர், நல்வினையைச் செய்க என்று விதிப்பதும், தீவினையைச் செய்யற்க

என விலக்குவதும் செய்வர். "கல்பொரு திரங்கு மல்லற் பேரியாற்று, நீர்வழிப் படூஉம் புணை போலாருயிர், முறைவழிப் படூஉ மென்பது திறவோர், காட்சியிற் றெளிந்தனம்" (புறம் 192) எனவும், "வாழச் செய்த நல்வினையல்லது, ஆழுங்காலைப் புணை பிறிதில்லை" (புறம் 367) எனவும் வருதல் காண்க. மேலும், இப்பெருமக்கள் பலரும் நலம் பயக்கும். நல்வினையையே விதந்து கூறியிருத்தலின், வினை யுணர்வு நல்லது செய்தற்கே சான்றோர்களால் பண்டைக் காலத்தில் மக்கட்கு வற்புறுத்தப் பட்டதென்பது தெரிகிறது. "நல்லது செய்தலாற்றீரா யினும், அல்லது செய்தல் ஓம்புமின்" (புறம் 195) எனவும், "நன்றுபெரிது சிறக்க தீதில்லாகுக" (ஐங்.9) எனவும் வருதல் காண்க. நல்வினைசெய்தவர் இம்மையிற் புகழும், மறுமையில் துறக்கவின்பமும் பெறுவர் என நல்வினையின் நலமே குறித்து. "பெரும்பெயர் நும்முன், ஈண்டிச்செய் நல்வினை யாண்டுச் சென்றுணீயர், உயர்ந்தோருலகத்துப் பெயர்ந்தனன்" (புறம். 174) என மாறோகத்து நப்பசலையாரும். "மயங்காது செய்தல் வேண்டுமால் நன்றே வானோர், அரும்பெற லுலகத்தான்றவர், விதுப்புறு விருப்பொடு விரிந்தெதிர் கொளற்கே" (புறம். 213) எனப் புல்லாற்றூர் எயிற்றியனாரும் பிறரும் அறிவுறுத்தி யிருக்கின்றனர். அகப்பொரு ளூல்களும், இவ்வாறே, நல்வினை இம்மையில் இசையும் மறுமையில் துறக்கமும் பயக்குமெனக்

கூறுகின்றன. "வினை விளையச் செல்வம் விளைவது போல்" (திணைமா. 150–5) என வருவதும், பிறவும் காண்க.

இருமையும் பயக்கும் நல்வினை செய்தற்கு நல்லாற்றில் ஈட்டும் பொருளும், அதனைச் செய்தற் குரிய முயற்சியும் சிறந்து நிற்றலின், அவற்றைக் குறித்து ஆண்மக்கள் தம்வாழ்க்கைத் துணைவியரைப் பிரிந்தேகுதல் நலம் என்றும், அவர்செலவு வினை வயிற் செல்லும் செலவு என்றும் சான்றோர் விரியக் கூறியுள்ளனர். "வினையே ஆடவர்க் குயிரே" (குறுந். 135), "சேறும் நாம் எனச் சொல்லச் சேயிழை, நன்றெனப் புரிந்தோய் நன்று செய்தனையே, செயல்படுமனத்தர் செய்பொருட்டு அகல்வராடவர் அதுவதன் பண்பே" (நற். 24), "ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லெனச், செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு, அம்மா வரிவையும் வருமோ, எம்மை யுய்த்தியோ வுரைத்திசினெஞ்சே" (குறுந். 63) என வருவன இதற்குப் போதிய சான்றாகும்.

இனி, ஆசிரியர் காவட்டனார் என்பவர், "வசையும் நிற்கும் இசையும் நிற்கும்: அதனால், வசைநீக்கி யிசைவேண்டியும், நசைவேண்டாது நன்றுமொழிந்தும்" வாழ்தல்வேண்டும் (புறம் 359) என அந்துவன் கீரன் என்று தலைவற்கும், ஆசிரியர் குடபுலவியனார், "செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும். ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி,

ஒருநீ யாகல்வேண்டினும் சிறந்த, நல்லிசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன், தகுதி கேளினி மிகுதியாள" (புறம்.18) எனப் பாண்டியன் நெடுஞ்செழியற்கும் அறிவுறுத்தியனவும் பிறவும், "அந்தோ வினையே" என்று அழுங்கி மயங்காது செய்வினையைச் சிறக்க அச்சமின்றிச் செய்யவேண்டும் என்பதையே வலி யுறுத்தி விளக்குகின்றன. ஒரோருகால், "நன்றி விளைவும் தீதொடும் வரும்" (நற். 188) எனினும் அத்தீதுகண்டு அஞ்சாது வினைசெய்தல் வேண்டும்; ஒருவினையைச் செய்யுமிடத்து, இடும்பையும் இடுக்கணும் வந்து தீதுசெய்யுமாயினும், "வினையே யாடவர்க்குயிர்", "வினைக் குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன்றுலகு", "சுடச்சுடரும் பொன்போல் ஒளி விடும் துன்பம் சுடச்சுட நோற்கிற்பவற்கு", "ஊழையும் உப்பக்கம் காண்பர்" என்றெல்லாம் சான்றோர் கூறியபொருளுரைகள், அவற்றிற் கஞ்சு தலும், வினையில்மடங்குதலும் கூடா என்பதனையே வற்புறுத்துகின்றன.

இக்கூறியவாற்றால், வினையெனச் சான்றோர் எடுத்துக் கூறியது யாவரும் மடியின்றிச் செய்தற்குரிய இம்மையில் இசையும் மறுமையில் பேரின்பமும் பயக்கும் நல்வினையே யென்றும், அதனால், நலம் பயக்கும் நல்வினையே பண்டைச் சான்றோரால், நல்வினை, நன்று ஆள்வினை, வினையெனப் பல்லாற் றானும் விதந்து கூறப்பட்டதென்றும் அறிகின்றோம். "யாம்செய் தொல்வினைக் கெவன்பேதுற்றனை" (நற்.

88) என்றாற் போல்வன, வினை செய்யுமிடத்து, எதிர்பாராமல் வரும் இடர்கட்கு உள்ளம் உடையாமல் ஊக்கம் கோடற்கெழுந்தவை என்றும், 'இடுக்கண் வருங்கால் நகுக' என்றாற்போல்வன, "இன்பமும் இடும்பையும் உணர்வும் பிரிவும், நண் பகலமையமும் இரவும்போல, வேறுவேறியலவாகி மாறெதிர்ந், துளவென வுணர்ந்தனை" (அகம் 327) எனவுணர்ந்து, இவற்றைப் பொருள்செய்யாது, செய்வினையைக் கடைபோக ஆற்றுவது குறித்துப் பிறந்த அறவுரையென்றும், "துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய நெஞ்சம் துணையில்வழி" என்றாற்போல்வன, உயிரின் வழி வினை நிகழ் தலுண்டேயன்றி, வினையின்வழி உயிர் இயங்குவ தில்லை என்றும் காட்டக் காண்கின்றோம். இதுவே தேவார காலத்திற்கு முன்னிருந்த சான்றோர் கொண்டிருந்த வினையுணர்வாகும்.

இதற்கிடையே, "காமஞ் சான்ற கடைக்கோட் காலை" மக்களொடு துவன்றிய கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் வேண்டும் என்ற பண்டைய முறை மாறி, "குழவியிடத்தே" துறவு விரும்பி, "இன்னா தம்மவுலகம், இனிய காண்க விதன் இயல்புணர்ந் தோரே" என்றும், "ஓடியுய்தலும் கூடுமன், ஒக்கல் வாழ்க்கை தட்குமாகாலே" என்றும் வந்த உரை களால், உலக வாழ்வில் மக்கட்கு உவர்ப்பும், செய்யும் வினையாவும் துன்பமுடிவின என்ற முடிபும் மக்கள் கருத்தில் இடம் பெறத்தொடங்கின. முயற்சியுடை

யார்க்குத் தேறுதல் சொல்லி, ஊக்கம் கொளுத்தும் கருத்தாற் பிறந்த வினையுணர்வுகள், வினைக்கண் மனம் மடிந்து சோம்பித்திரிவார்க்கு அரணாகத் தொடங்கின. வினையே உயிர்கட்கு முதல் என்றும், வினைவழியே உயிர் இயங்குதற்குரிய தென்றும் மக்கள் பேசத்தொடங்கினர். வினைவழிப் பிறக்கும் இன்பமும் துன்பத்திற்கே ஏதுவென்றும், துன்பமே உயிர் உடலொடு கூடிப்பெறக் கடவ பயன் என்றும் சில சான்றோர் தெருட்டத் தொடங்கினர். இந் நிலையில், தமிழ் நாட்டிற்குப் புதியவாய் வந்த சமண புத்த சமயங்களும் துணை செய்யத் தொடங்கின. யாவரும் எப்போதும், எச்செயலைச்செய்தற்கும், "அந்தோ வினையே" என்று அழுங்கி ஊக்கம் குன்றுவாராயினர்.

ஒருவன் தன் ஆண்மையால் முயன்று பெறக் கூடிய நல்லுண்டி, நல்லுடை, நல்லுறையுள் ஆகிய இவையாவும் முன்னை வினைப்பயனே; "பண்டு செய்வினையலால் பரவு தெய்வ மொன், றுண் டெனில் தான்பயன் உதவ வல்லதோ?" என்பன போன்ற கருத்துக்கள் எழுந்து, நாட்டில் ஆண்டவன் அருட்டிறத்தையும், அவனை வழிபடுவதன் நலத்தை யும் அசட்டை செய்யுமாறு தூண்டின. இக்காலமே நம் ஞானசம்பந்தர் தோன்றிய காலமாகும்; தன் உயிரறிவுக் குள்ள சிற்றுரிமையை நெகிழ்த்து, வினைக்கு அடிமை யாக்கும் சிறுமைக்காலம்; நலமும் தீங்கும், இன்பமும் துன்பமும் உயிர் தன் உரிமை

யறிவால் ஆண்டவன் திருவருளால் பெறுதல் கூடும் என்னும் உண்மை நெறியை மறைத்து நின்ற காலமாகும்.

ஆகவே, இக்காலம், நம் ஞானசம்பந்தர் தோன்றிய காலம், இற்றைக்குச் சுமார் சற்றேறக் குறைய 1300 யாண்டுகட்கு முற்பட்ட காலமாகும். இக்காலத்தில், வினையுணர்வுக்குத் தலைமையும், ஆண்டவன் திருவருட் சிறப்பிற்குக் கீழ்மையும் மக்கள் உள்ளத்தில் தோற்றுவிக்கும் புதுக் கொள்கை களும், புதுச் சமய நெறிகளும் கற்பித்து வந்தன. அதனால், நம் ஆளுடைய பிள்ளையார், வினை களையும், அவை பயக்கும் பயனையும், வினைத் தொடர்பைக் கெடுக்கும் பரமனது முதன்மையையும், பிறவற்றையும் விளக்கியருளும் கடன்மையுடையரா னார். அவரது அருட்பாடல்கள் பலவும் வினையின் தொடர்பறும் முறைமையை யுணர்த்தும் நோக்கமே பெரிதும் உடையவாயின.

வினைகள்யாவும் பண்டைவினை, நிகழ்வினை (செய்வினை), எதிர்காலவினை யென மூவகையாகும். அவையாவும் பரமன் திருவருள்வழி நிற்பார்முன் வலியழிந்து, தொடர்பற்றுக்கெடும் என்பது ஆளுடையபிள்ளையார் மக்கட்கு அறிவுறுத்திய வினையுணர்வாகும். "தொல்லை வல்வினை தீர்ப்பர் சுடலை வெண்பொடி யணிசுவண்டர்" (திருத் தெங்கூர்), "மெய்த்தன்னுறும் வினைதீர் வகை தொழுமின்" (ஆலந்துறை), "வெய்யவினை நெறிகள்

செலவந்தணையும் மேல்வினைகள் வீட்டலுறுவீர்" (மாகறல்) என்பன போலவரும் திருமொழிகள் வினைவகையினையும், அவற்றின் வலியின்மையையும் உணர்த்துவனவாகும்.

வினைகளே உயிர்கள் நுகரும் இன்பதுன்பங்கட்கு ஏது வாகலின், ஆண்டவன் வேண்டப்படான் என்று கூறிய சமயக் கணக்கர் பலர் அக்காலத்திருந்தனர் என முன்பே கூறினோம்; அவர்களைத் தெருட்டுவார் போலச் சிலபல வுரைகள் பிள்ளையார் அருளியுள்ளார்.

"நல்குரவும் இன்பமும் நலங்களவையாகி
வல்வினைகள் தீர்த்தருளும் மைந்தனிடமென்பர்,
மல்குமடி யார்கள் படியார விசைபாடிச்
செல்வமறை யோருறை திருப்புகலியாமே"

என்றும்,

"துன்பானைத் துன்பம்துடைத் தருளாக்கிய
இன்பானை யேழிசை யின்னிலை பேணுவார்
அன்பானை யணிபொழிற் காழிநகர் மேய
நம்பானை நண்ணவல்லார் வினை நாசமே"

என்றும், இவ்வாறு பலவும் வருவன உள. வினைகள் அறிவில் பொருள்களாகலின், இவை தம்பயனைக் கொண்டு வினை முதலை நுகர்விக்கும் திறமுடைய அல்லவாகலின், அது செய்தற்குரிய அறிவுடைப் பொருள் ஆண்டவனேயென்றும், அதனால், அவனன்றி வினைமுதல் வினைப்பயனை நுகர்தல்

கூடாமை கருதி, வினைப் பயன்களைக் கூட்டலும் பிரித்தலும் வல்ல அவனையே நல்குரவும் செல்வமும், துன்பமும் இன்பமுமாக உபசரித்துக் கூறியும், அவனுக்கு முதன்மையும் வினைகட்குக் கீழ்மையும் காட்டியும் நம் ஆளுடையபிள்ளையார் தெருட்டியருளுகின்றார்.

வினைகள் தம் பயனை வினைமுதல் நுகருமாறு கூட்டும் அறிவுடையவல்ல வாயினும், அவ் வினை முதலைப் பற்றி விடாது தொடர்ந்து நின்ற, அவ்வுயிர் எத்துணைப்பிறவி யெடுக்கினும், பிறப்புத்தோறும் அதன்கட் கிடந்து தொடர்தல் குறித்து அவைகளை "அருவினை" யென விசேடித்தல் நம் நாட்டுச் சமயக்கணக்கர் மரபு. நம் ஆளுடைய பிள்ளையாரும், வினைகளை "அருவினை', யென்று விசேடிப்பாரா யினும், அவற்றின் அருமையினைச் சிதர்க்கும், தலைமை ஆண்டவற்குண்டெடன வலியுறுத்துவதை விடுவதிலர்.

"பணிந்தவர் அருவினை பற்றறுத் தருள்செயத்
துணிந்தவன் தோலொடுநூல் துதை மார்பினில்
பிணிந்தவன் அரவொடு பேரெழி லாமைகொண்
டணிந்தவன் வளநகர் அந்தண் ஐயாறே"

என்பதும் பிறவுமாகிய திருப்பாட்டுக்கள் இவ் வுண்மையை நிலை நிறுவுகின்றன.

இனி, உயிர்களைப்பற்றிநிற்கும் வினைகளின் தொடர்பு கெடுதற்கு ஆண்டவனை வழிபடும்

செய்கையே உரிய செய்கையாகும் என்பதைப் பல திருப்பாட்டுக்களில் வெளிப்படையாகவும், உள்ளுறுத்தும் ஞானசம்பந்தப் பிள்ளையார் தெருட்டியருளுகின்றார். வெளிப்படையாகத் தெருட்டுதலைக் காட்டும் பாசுரங்கள் மிகவாய்ப் பல்கி யாவரும் காணக்கிடத்தலின், அவற்றை விலக்கி உள்ளுறுத்துரைக்கும் பாசுரங்கள் சிலவாய்ச் சிலரே காணத் தக்கவாய் இருத்தலின், அவற்றுள் ஒன்றைக் கூறுகின்றோம்.

நம் ஆளுடைய பிள்ளையார் சீகாழிக்கருகிலுள்ள திருக்கோலக்கா என்னும் திருப்பதிக்குச் சென்று, தம் மெல்லிய கைகளால் தாளம் போட்டு "மடையில் வாளைபாய" என்ற திருப்பதிகத்தைப் பாடியருளிய செய்தி தமிழ்நாடு நன்கறிந்ததாகும். ஆயினும், இப்பதிகத்துள் உயிரறிவு ஆண்டவனைப் பாடிப் பரவுதலாம் கலங்கி அருண்மணங்கமழ்ந்து, வினைப் பிணிப்புத் தளர்ந்து, அறியாமை நீங்கிப் பேரின்ப நுகர்ச்சிக் குரிமையெய்தும் திறத்தை உள்ளுறுத்துரைக்கின்றார்.

"மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சும்கீள்
உடையும் கொண்ட உருவம் என்கொலோ"

என்பது முதற்பாசுரம். இதில், அடியார்கள் பரமானது அருள் நினைந்து பாடிப்பரவித் திளைத்தலால், அவர் தம் உயிரறிவு கலங்கி அருண் மணம்

கமழுகின்றதென்பதனை, "மடையில் வாளைபாய, மாதரார் குடைதலால் நெய்யொடு குங்குமம் நிறைந்துநறுமணம் கமழும் பொய்கை" என்பதனால் குறித்தருளுகின்றனர்.

அருள் நினைந்து பரவிப்பாடியாடும் அடியார் உள்ளம் அவன் அருண்மணமே கமழ்தற்குரிய அவனது அருளை, அருள் நிலையை அடுத்த பாசுரத்தில்,

"பெண்டான் பாகமாகப் பிறைச் சென்னிக்
கொண்டான் கோலக்காவு கோயிலாக்
கண்டான் பாதம் கையாற் கூப்பவே
உண்டான் நஞ்சை யுலக முய்யவே"

என்று அருளுகின்றார். பெண்ணென்பது திருவருள், பெண்ணைப் பாகங்கொண்டதோடு பிறையைச் சென்னியிற் கொண்டதும் அருளே என்பதனைப் பிறிதோரிடத்தில், "முன்னுயிர்த் தோற்றமும் இறுதியு மாகி, முடியுடையமரர்கள் அடிபணிந்தேத்தப், பின்னிய சடைமிசைப் பிறைநிறைவித்த பேரருளாள னார் பேணிய கோயில்" "என்றும், பெண்ணைப் பாகம் கொண்டதும் உயிர்கட்கு அருள்செய்தற்கே என்பதை, "ஆணும் பெண்ணுமாய் அடியார்க் கருணல்கிச், சேணின்றவர்க் கின்னம் சிந்தை செய வல்லான், பேணிவழிபாடு பிரியா தெழுந்தொண்டர் காணும்கடல்நாகைக் காரோணத்தானே" என்புழியும் விளக்கியருளுகின்றார்.

இத்தகைய அருள்வள்ளல், தன்னைவிரும்பிப் பாடியவழி, அடியார் வினைப்பிணிப்புப் பறையச் செய்யும் எளிமையுடையன் என்பதனை,

"பூணற் பொறிகொள் அரவப் புன்சடை
கோணற் பிறையன் குழகன் கோலக்கா
மாணப் பாடி மறை வல்லானையே
பேணப் பறையும் பிணிக ளானவே"

என்று கூறியருளுகின்றார். உயிர்களைப் பிணித்து நிற்றலின், வினைகளை ஈண்டு, "பிணிகளானவே" என்கின்றார். "பாடுவாரிசைப் பல்பொருட்பயன் உகந்தன்பால், கூடுவார் துணைக் கொண்டதம் பற்றறப் பற்றித், தேடுவார் பொருளானவன்" (தேவூர்) எனப் பிறிதோரிடத்து வெளிப்படையாகக் குறித் தருளுகின்றார்.

இங்ஙனம் பிணித்துக் கொண்டுநிற்கும் வினை களைத் தகர்க்கும் முறையினை அடுத்த பாசுரத்தில் மிகவருமையாகக் குறிக்கின்றார். பரமன் கையில் ஏந்தும் மழுப்படையின் வெம்மையாலும், மறி மானின் முழக்கத்தாலும் உயிரறிவைத் தழுவிப் பிணித்து நிற்கும் வினைகட்கு முதற்கண் தளர்ச்சி யெய்துகின்றதென்பார்,

"தழுக்கொள் பாவம் தளர வேண்டுவீர்,
மழுக்கொள் செல்வன் மறிசேர் அங்கையான்
குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா
இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மினே"

என்று அருளுகின்றார். வினைப்பிணிப்பை விரைய நீக்கியவழியெய்தும் கேடுகருதி, பையநீக்குவராதலின், அதுகுறித்து, அவனை, "ஏத்தி வாழ்மின்" என அறிவுறுத்துகின்றார். பையநீக்குவதே அவரது பான்மை யென்பதனைப் பிறிதோரிடத்தும், "செய்ய மேனி வெளிய பொடிப்பூசுவர், சேரும் அடியார் மேல்,* மெய்ய நின்றபெருமான்" (புகலூர்) என மொழிந்தருளுகின்றார். ஏத்துமிடத்தும் இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மின் என்கின்றார். "துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி, மறக்குமா றிலாதவென்னைமையல் செய்து மண்ணின்மேல், பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படும் உடம்பு விட்டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குகின்ற தென்னையே" என்ற திருப்பாட்டிலும், இழுக்கிய வழி, பிறக்குமாறு காட்டுதலும், இழுக்காவழி, பிறப்புவிட்டு இறக்குமாறு காட்டுதலும் உண்மையின், 'இழுக்குகின்றதென்னை' என்று வற்புறுத்துதல் காண்க.

இவ்வாறு, தழுவிட்டுத் தளர்ச்சி யெய்திய வினை, நீங்கற்குரிய பாகம் பெறுவதற்கு உரிய முயற்சி, அவனைவிடாது பயிலும் பயிற்சியே யாகும் என்பார்,

"மயிலார் சாயல் மாதொர் பாகமா
எயிலார் சாய எரித்த எந்தை தான்

* அடியார் மேல் நின்றவினை பையப் பரற்றுவர் என இயையும்.

குயிலார் சோலைக் கோலக் காவையே
பயிலா நிற்கப் பாவம் பறையுமே"

என்று மொழிந்தருளுகின்றார். குயில்கூடிப்பாடி மகிழும்சோலை கூறவே, கோலக்காவில், அடியார் பலரும் சேரவிருந்து அவன் திருவருளைப் பாடுதல் பெற்றாம். அடியாரொடு பயிலுதல் வேண்டும். அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவார் "உரை தளர்ந்துடலார் நடுங்காமுனம், நரை விடையுடை யானிடம் நல்லமே, பரவுமின் பணிமின் பணிவா ரொடே, விரவுமின் விரவாரை விடுமினே" என நாவரசப்பெருமானும், "மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்விக்கும், சிறப்பிலார்தம் திறத்துச் சேர்வை - அறப்பித்துப், பத்த ரினத்தனாய்ப் பரன் நினைவினாலுணரும், மெய்த்தவரைமேவாவினை" எனமெய்கண்ட தேவநாயனாரும் தெருட்டி யருளுதலால் இவ்வுண்மையை அறிகின்றோம்.

இத்தகைய பயிற்சியால் நீங்குதற்குரிய பக்குவம் பெற்று வரும் வினைகள், பின்னர், அவன் திருவடி ஞானத்தால் வெடிபட்டு வீற்று வீற்றோடிவிடும்; ஆதலால், அத்திருவடியை அடைந்து வாழ்மின் என அடுத்தபாசுரத்தில், நீங்கற்குரியவாய் வரும் வினை கள் அறவே நீங்கும் முறையைத் தெரிவிக்கின்றார்.

"வெடிகொள் வினையா வீட்ட வேண்டுவீர்,
கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்
கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்
அடிகள் பாதம் அடைந்து வாழ்மினே"

என்பதுபாசுரம். இதன்கண் வெடிகொளல் என்பது சிதர்த்தொழிதல்; "கடிகாவில் கால்துற்றெறிய வெடிபட்டு, வீற்று வீற்றோடும் இனமயில்போல், கேளிர் பிரிந்தார் அலறுபவே" (களவழி 40) என்பதனால் அறிக. மெல்ல நீங்கிவரும் வினைகள் மீட்டும் முன்னைப் பயிற்சிவயத்தால் மீளத் தோன்றா வண்ணம் கெடுக்க வேண்டியிருத்தலால், "வினையை வீட்டவேண்டுவீர்" எனவிளித்து, "அடிகள்பாதம் அடைந்து வாழ்மினே" என்று அருளுகின்றார். இக்கருத்தையே, திருமாகறற்பதிகத்திலும்,

"வெய்யவினை நெறிகள்செல வந்தணையும்
மேல்வினைகள் வீட்டலுறுவீர்,
மைகொள்விரி கானல்மது வார்கழனி
மாகறலுளான் எழிலதார்
கையகரி கால் அரையின் மேலதுரி
தோலுடைய மேனியழகார்
ஐயனடி சேர்பவரை யஞ்சியடையா
வினைகள் அகலுமிகவே,"

என்று அறிவுறுத்துகின்றார். மேல்வினைகளை வீட்டிய வழி, நின்ற வினையும் பற்றுக் கோடின்றிக் கெடும் என்றற்கு,

"நிழலார் சோலை நீல வண்டினம்
குழலார் பண்செய் கோலக் காவுளான்
கழலால் மொய்த்த பாதம் கைகளால்
தொழலார் பக்கல் துயர மில்லையே"

என்று பாடியருள்கின்றார். பாதம் நினைந்து தொழுமிடத்து, அதன் அழலொளி வினையிருள் எய்தாவகைக் கெடுத்தலின், அடியார்க்குத் துயர மில்லையென்பார், "பாதம் கைகளால் தொழலார் பக்கல் துயரமில்லையே" என்றார். அழகாய கழலான் அடிநாளும் கழலாதே விடலின்றித், தொழலாரவர் நாளும் துயரின்றித் தொழுவாரே" (நெய்த்தானம்) எனப் பிறாண்டும் இதனையே தெருட்டுவர்.

நிழல் மிக்க சோலையின், வண்டினம் தேனுண்டு பண்பாடும் எனவே, அவன் திருவடி நீழலில் பெரும் போகம் துய்க்கும் மகிழ்வால், அடியார்கள் அவன் திருப்புகழ் பாடுதல் பெறப்படும். நாவரசரும், பரமன் திருவடி செந்தேன் பொழியும் என்பதனை, "சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப்பொழிவன" என்றே மொழிந்தருளுகின்றார்.

இவ்வாறு, வினையியல்பும், அது பரமன் வழிபாட்டால் நீங்குமாறும், நம் ஆளுடைய அடிகள் வெளிப்படையாகவும், உள்ளுறுத்தும் தெரிவித் தருளிய போழ்தும், சிலர்பலர், அவ்வினையியல்பை யுணர்ந்தும் அயர்ந்திருந்தனர். அவர்க்கு நல்லறிவு கொளுத்துவார் திருநீலகண்டத் திருப்பதிகத்தில் அவர்தம் கொள்கையை மறுத்துப் பரமனை வழிபாடு புரியுமாறு நன்கு தெருட்டுகின்றார்.

"அவ்வினைக் கிவ்வினையாம் என்று
சொல்லு மஃதறிவீர்,

உய்வினைநா டாதிருப்பதும் உந்தமக்
கூனமன்றே,
கைவினைசெய் தெம்பிரான் கழல்போற்றுதும்
நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா
திருநீலகண்டம்"

என்பது அப்பாசுரம். இதன்கண், வினைமேற்பழி யேற்றி, தாம் நுகரும் பயன்யாவும் முன்வினையால் வந்தன என்பாரை நோக்கி, "அவ்வினைக் கிவ்வினை யாம் என்று சொல்லும் அதனை மட்டில் அறிந் திருக்கின்றீர்களே, அவ்வறிவால், அவ்வினையைக் கெடுத்தற்குரிய நெறியும் காண்டல் கூடும் என்பதை அறியா திருப்பது உமக்குக்குற்றமாகுமே" என்பார், "உய்வினை நாடா திருப்பதும் உந்தமக்கு ஊனமன்றே" யென்றார். கெடுத்தற்குரிய அந்நெறியும் வேறன்று; ஈதே என்றற்கு, "கைவினை செய்து எம்பிரான் கழல் ஏத்துதும்" என்றும், "அதுதவிர யாம் வேறு செய்தற்குரிய நெறியில்லோம்; ஏனெனில், நாம் அவ்வாண்டவனுக்கு அடிமை" என்பதனை வற் புறுத்த நினைத்து, "நாம் அடியோம்" என்றும், அச்செயலால் நாம் தூய சத்துப்பொருளாதலின், அசத்தாகும் செய்வினைகள் வந்து சேர்வது இல்லையாம்" என்பார், "செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா" என்றும், இதற்குச்சான்று "திருநீல கண்டமே" என்றும் தெருட்டியருளுகின்றார். "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்

சார்தரா சார்தரும் நோய்” என வள்ளுவப் பெருந் தகையும் வழங்கியிருக்கின்றார்.

இதுகாறும் கூறியவாற்றல், வினையுணர்வின் பயன் பரமன் திருவடியைப் பரவித் தொழுவதே யன்றிப் பிறிதில்லை யெனத் திருஞானசம்பந்த சுவாமிகள் தெருட்டியருளுகின்றார் என்பதாம்.

“பிறவியெனும் பொல்லாப்பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோற்றோணி கண்டீர்–நிறையுலகின்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்”

11

# பட்டினத்துப் பிள்ளையார்

**சை**வத்திருமுறை பன்னிரண்டனுள் பதினோ ராந் திருமுறையிற் காணப்படும் நூலாசிரியன்மார் களான சான்றோர்களுள் பட்டினத்துப்பிள்ளை யாரும் ஒருவராவர். இவர் பாடியனவாகக் கோயில் நான்மணிமாலை, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திரு வேகம்ப முடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபது என ஐந்து நூல்கள் பதினோராந் திருமுறையில் உள்ளன.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் காவிரிப்பூம்பட்டினத்தில் இவர் தோன்றி வளர்ந்து வாழ்ந்தவர்; இவர், பிற்காலத்தே துறவு பூண்டபின் சான்றோர்களால் பட்டினத்துப்பிள்ளையா ரென்று வழங்கப்படுவாராயினர் (திருவிடை. 30). இவர், காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த சைவ வணிகர் குடியில் கடல் வாணிகம் செய்து மிக்க செல்வம் பெற்ற செல்வரொருவருக்கு மகனாராவர். திரு

வெண்காடருடைய தந்தை பெயர் சிவநேசர் என்றும் தாய் பெயர் ஞானகலாம்பை என்றும் கூறுவர்.

திருவெண்காடர், உரிய காலத்தில் திருமணம் செய்து கொண்டு, கடல் வாணிகம் செய்து, பெருஞ் செல்வராய் விளங்கினார். அவர்க்கு மருதவாண னென்றொரு மகன் பிறந்து, பதினாறாண்டளவும் இருந்து, பின் இறந்து போனான். அதனால் கவலை மிகக் கொண்ட திருவெண்காடர், திருவிடை மருதூரிலிருந்து வறுமை மிக்கு வருந்திவந்த ஆதிசைவர் ஒருவருடைய ஆண்மகவை விலைக்கு வாங்கி மருதவாணனென்றே பெயரிட்டு வளர்த்து வந்தார். அவனும் அவருடைய உண்மை மகனாகவே வளர்ந்து சிறந்து கடல் வாணிகம் செய்து பெருஞ் செல்வம் ஈட்டித் தந்து, காதற்ற ஊசி யொன்றையும், 'காதற்ற வூசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்றெழுதிய ஓலை நறுக்கொன்றையும் கொடுத்து விட்டு வெளிச் சென்று மறைந்து போனான். அதுகண்ட திருவெண்காட ருள்ளத்தில் துறவு பிறந்தது. அந்நாளில் அவரிடம் தலைமைக் கணக்க ராய்ச் சேந்தனார் என்னும் சான்றோ ரொருவர் இருந்தார். வெண்காடர் தமது பெருஞ் செல்வத்தைப் பொது மக்கட்கு வழங்கி விடுமாறு சேந்தனாரைப் பணித்துக் கையில் ஓடும் அரையில் கோவணமும் கொண்டு வெளியேறினார். மருதவாணன் பிரிந்த பின்னாட்களில் வெண்காடருடைய மனைவியாரும் காலமாயினர். வெண்காடருடைய தாய்மட்டில் உயிரோடிருந்ததனால், அவர்க்கு வேண்டிய ஏற்

பாட்டைச் செய்துவிட்டு, சிவபெருமான் எழுந் தருளும் திருப்பதிகட்குச் சென்று பரவிவழிபடும் செயலை அவர் மேற்கொண்டார். வீடுதோறும் சென்று ஓட்டில் உணவிரந் துண்டனர். அவருடைய உறவினர், வேந்தனைக் கொண்டும் வேறு தக்கோரைக் கொண்டும் அவர் உள்ளத்தை மாற்ற முயன்றனர்; சேந்தனாரைச் சிறையிடுவித்தனர்; திருவெண்காடருக்கும் நஞ்சு கலந்த உணவளித்துக் கொல்ல முயன்றனர்; ஒன்றாலும் திருவெண் காடருடைய உள்ளம் மாறவேயில்லை.

திருவெண்காடர், திருவிடைமருதூரில் சின்னாள் தங்கி இடைமரு திறைவனை வழிபட்டுக் கொண்டு வந்தார். அந்நாளில் அவருடைய தாயார் இறந்தனர்; அவர்க்குரிய இறுதிக் கடன்களைச் செவ்வே ஆற்றிவிட்டு மீளவும் திருவிடைமருதூர் சென்று சேர்ந்தார். அங்கே யிருக்கும்போது அவர் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையைப் பாடினார். பின்பு அவர் சீர்காழி, தில்லை, காஞ்சிமாநகர், காளத்தி முதலிய திருப்பதிகளை வணங்கிக் கொண்டு வடநாடு சென்றார்.

வடநாட்டில் பத்திராசலப் பகுதியில் மாகாளம் என்னுமோர் ஊரை யடைந்து, ஒருநாள் இரவு அங்கேயிருந்த பாழ்ங்கோயிலொன்றில் நிட்டை கூடியிருந்தார். அந்நாளில் அப்பகுதியைப் பத்திரகிரி யென்னும் குறுநில மன்னன் ஆண்டுவந்தான். அவனுடைய அரண்மனையில் களவு புரிந்த கள்வர்

